11th September 1958]

SRI A. V. P. ASAITHAMBI : இந்தக் இரும்புக் கனி கிடைப்பது போல பற்பல இடங்களில் பல மூலப் பொருள்கள் இருப்பது ஆராய்ச்சிகள் செய்யப்பட்டு கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றது. இவைகளைப் பயன் படுத்த முடியாமல் இருப்பது மத்திய சர்க்கார் தென்னகத்தைப் புறக்கணிக்கிறது என்ற காரணத்தினாலா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : சில இடங்களில் கனிப் பொருள்கள் கிடைக்கின்றன. இவைகளைப் பயன்படுத்த வேண்டுமென்றால், தனியார் துறையில் யாரும் முன்வரவில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். சர்க்கார் துறையில் எல்லாவற்றையும் செய்ய முடியாது. அப்படியும் செய்யலாமென்று வரி போட்டால் எதிர் கட்சிக்காரர்கள் கூச்சலிடுகிறார்கள். இதற்கு என்ன செய்வது என்று புரியவில்லை.

*Paper manufacturing factory*

* 118 *Q*.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state why the proposal to start a Newsprint factory has been given up for the present?

THE HON. SRI R. VENKATARAMAN : The raw materials required for a newsprint factory will not be available in sufficient quantities until 1965 assuming that the present programme of planting of blue gum and wattle proceed according to plan and there are no mishaps like insect pests and other incidental risks. It would, therefore, not be worthwhile to plan a factory now to go into production 8 or 10 years later. The matter will be kept in view and steps taken at the appropriate time.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that there is a strong feeling in our State that South India is being neglected by the Union Government in the matter of location of big industries?

MR. SPEAKER : The hon. Member may raise this question during the discussion on the budget and not at question time.

SRI S. B. ADITYAN : Have the Government investigated the possibilities of starting a newsprint factory utilising sugarcane bagasse which is available in plenty in this State?

THE HON. SRI R. VENKATARAMAN : I have discussed this matter with the Industrial Adviser to the Government of India, Dr. Nagaraja Rao, and I am informed that a newsprint factory can be established with raw materials like blue gum, wattle, etc.

MR. SPEAKER : The next three questions—119, 120, and 125-B all refer to paper manufacture. The Hon. the Minister will answer them all and then I will give chance for supplementary questions being put.

*119 *Q*.—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) காகித உற்பத்திச் சாலைகள் சென்னை சர்க்காராலும், தனிப்பட்டவர்களாலும் எந்தெந்த இடங்களிலே நடத்தப்பட்டு வருகின்றன ?

(ஆ) பேப்பர் உற்பத்திக்கான கச்சாப் பொருள்கள் எந்தெந்த இடங்களில் கிடைக்கின்றன ?

(இ) நியூஸ் பிரிண்டு காகிதம் எந்தெந்த இடங்களிலிருக்கும் காகித உற்பத்திச் சாலைகளில் உற்பத்தி செய்யப்படுகிறது ?

(ஈ) கிளேஸ் பிரிண்டு காகிதம் எந்தெந்த காகித உற்பத்தி தொழிற் சாலைகளில் உற்பத்தி செய்யப்படுகிறது ?